*Elementary schools.*

* 394 *Q*.—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the number of elementary schools in the Talavadi firka, Coimbatore district;

(*b*) the number of students, boys and girls, studying in these schools; and

(*c*) the number of Harijan boys and girls among them?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) 30

(*b*) Boys 932
Girls 378.

(*c*) Boys 110
Girls 88.

SRI P. G. MANICKAM : தாலவடி பிர்க்காவில் 22 கிராமங்கள் இருக்கின்றன. இன்னும் அநேக கிராமங்களில் பள்ளிக்கூடம் ஏற்படுத்தப் படாமல் இருப்பதாகத் தெரிகிறது. அத்துடன் லோக்கல் டெவலெப்மெண்ட் ஸ்கீமில் 12 இடங்களில் பள்ளிக்கூடங்கள் கட்டுவதாகத் தெரிகிறது. ஆனால் அங்குள்ள மக்கள் ஏழைகளாக இருப்பதினால் அவர்களால் பள்ளிக்கூடம் கட்ட நன்கொடை கொடுக்க முடியாமல் இருப்பதால் அதையும் இலவசமாகக் கட்டிக் கொடுக்க முயற்சி செய்வார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : 22 கிராமங்கள் இங்கு இருப்பதாகச் சொன்னார்கள். இப்பொழுது இங்கு ஏற்படுத்தப்பட்டிருக்கும் பள்ளிக்கூடங்கள், 30. லோக்கல் டெவலெப்மெண்ட் ஸ்கீமைப் பற்றி தனியாக கேள்வி போட வேண்டும்.

SRI G. G. GURUMURTHI : இருக்கிற பள்ளிக்கூடங்களில் போதுமான ஆசிரியர்கள் இல்லாதது அரசாங்கத்திற்குத் தெரியுமா ? அப்படியானால் கூடுதல் ஆசிரியர்களை நியமிக்க ஜில்லா போர்டுக்கு உத்தரவு அனுப்புவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஜில்லா போர்ட் நிர்வாகத்தில் எவ்வளவு உபாத்தியாயர்கள் வேண்டுமோ அவ்வளவு உபாத்தியாயர்களை நியமித்துக் கொண்டிருக்கிறார்கள். எந்தப் பகுதியில் உபாத்தியாயர்கள் குறைவாக இருக்கிறார்களோ அதை ஜில்லா போர்ட் நிர்வாகிகளின் கவனத்திற்குக் கொண்டு வந்தால் கட்டாயம் நடவடிக்கைகள் எடுத்துக் கொள்வார்கள்.

SRI P. G. MANICKAM : இந்தப் பிரதேசத்தில் வசிப்பவர்கள் 90 சத விகிதம் ஹரிஜன மக்கள்தான். பள்ளிக்கூடத்தில் மிட் டே மீல்ஸ் வழங்க நன்கொடை வசூலிக்க ஒரு திட்டம் போட்டிருப்பதாகத் தெரிகிறது. ஆகவே, அங்கு 90 சத விகிதம் மக்கள் ஹரிஜனங்களாக இருப்பதால் ஹரிஜன இலாகா பண்டில் இருந்து பணம் எடுத்து மத்தியான உணவு எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் கொடுக்க ஏற்பாடு செய்யப்படுமா ?

MR. SPEAKER : மூலக் கேள்விக்கும் இதற்கும் சம்பந்தம் இல்லே.

*Slums.*

* 395 *Q*.—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the amount allotted for slum clearance and town-planning schemes in the municipalities and major panchayats in Coimbatore district in 1957–58; and

25th March 1958]

(*b*) the number of municipalities and major panchayats in which such work has been taken up?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Amount allotted during 1957–58 for—

(1) Slum Clearance Schemes.—Nil.

(2) Town Planning Schemes.—Rs. 9,40,550.

(*b*) Eight municipalities and three panchayats.

SRI P. G. MANICKAM : இந்த பஞ்சாயத்து போர்ட் மூலமாகவும், முனிஸிப்பாலிட்டிகள் மூலமாகவும் ஹரிஜனங்களுக்கு வீடு கட்ட இந்தத் தொகையிலிருந்து எவ்வளவு செலவழிக்கப்பட்டது ? எந்தெந்த முனிஸிப் பாலிட்டிகளும், பஞ்சாயத்து போர்ட்களும் வீடுகள் கட்ட பிரயாசை எடுத்துக் கொண்டன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் அங்கத்தினர் பொது வாக கேட்டிருக்கிறார்கள். ஆகவே அந்த விவரத்தை இந்தக் கேள்வி யிலிருந்து சொல்லமுடியாது

SRI V. K. KOTHANDARAMAN : பெரிய நகரங்களில் சேரி ஒழிப்புத் திட்டத்தில் கவனம் செலுத்துவது போல் கிராமங்களில் கவனம் செலுத்தப் படவில்லை. இதுவிஷயமாக பார்லிமெண்டில் ஒரு கேள்வி கேட்டபோது. . .

MR. SPEAKER : பார்லிமெண்ட்டில் கேட்டால் அதற்கு இந்த மந்திரி எப்படி ஜவாப்தாரியாக முடியும் ? பார்லிமெண்ட் சமாசாரம் இங்கு வேண் டியதில்லை.

SRI V. K. KOTHANDARAMAN : சேரி அபிவிருத்தி சம்பந்தமாக எவ்வளவு ராஜ்ய சர்க்கார் கேட்கிறார்களோ, அவ்விஷயத்தில் நாங்கள் அக்கறை காட்டுவோம், கவனம் செலுத்துவோம். . . .

MR. SPEAKER : I disallow this supplementary question.

*Prime Minister's visit.*

* 396 *Q.*—SRI A. V. P. ASAITHAMBI AND SRI A. GOVINDA SAMY : Will the Hon. the Chief Minister be pleased to state the total expenditure incurred by the Government on account of the Prime Minister's visit to Madras on the 6th January, and his return from Madras on the 7th January 1958?

THE HON. SRI C. SUBRAMANIAM : A total expenditure of Rs. 43,542–20 nP. was incurred by this Government in connection with the visit to Madras of the Prime Minister of India on 6th January 1958.

SRI A. GOVINDASAMY : இம்மாதிரி பிரதமர் அவர்கள் அடிக்கடி இந்தப் பகுதிக்கு வருவதால் அதிகச் செலவு ஏற்படுவதால் இந்தச் செலவை மத்திய சர்க்காரே ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று இந்த சர்க்கார் மத்திய சர்க்காரைக் கேட்குமா ?

THE HON SRI. C. SUBRAMANIAM : இதில் செலவு கொஞ்சம் அதிக மானதற்குக் காரணம் திராவிடமுன்னேற்றக்கழக இயக்கந்தான் என்று தெரிவித்துக் கொள்கிறேன். ஆகவே, தயவுசெய்து அவர்கள் சட்ட விரோதமாக எதுவும் செய்யாமல் நல்லவழியில் நடந்துகொள்வார்களே யானால் குறைவாகச் செலவு செய்தால் போதும். பிரதம மந்திரியையும் இங்கு அடிக்கடி வரவேற்கலாம்.